# இதயத்தைத் திறக்கும் வழி.



அல் ஆரிபுபில்லாஹ் அல்முஹிப்புர்
ரஸூல் அல்அல்லாமா அஷ்ஷெய்குல்
காமில் அஷ்ஷாஹ்
ஷெய்கு அப்துல் காதிர்
ஸூபி ஹழரத் அஸ்ஸித்தீகீ அல்காதிரி
அல்காஹிரீ ரலியல்லாஹு அன்ஹு
அவர்களின் 40-ம் நாள் பாத்திஹா
விழாவில் அன்னாரின் நினைவாக

காயல்பட்டணம்
ஹிஸ்புல்லாஹ் ஸபையினரால்
வெளியிடப்பட்டது.

# ஷெய்குனா அவர்களின் வம்சப் பரம்பரை.

1. ஸெய்யிதுனா அபூபக்ர் (ரலி) 2. அப்துல்லா
3. ஸயீது 4. ஸஃது 5. இஸ்ஹாக் 6. ஈஸா
7. இல்யாஸ் 8. அப்துர் ரஹ்மான் 9. இப்ரா
ஹீம் 10. ஹுஸைன் 11. ஜாபிர்
12. அஹ்மது 13. ஸாலிம் 14. ஸாலிஹ்
15. ஜகரிய்யா 16. அப்துல் கரீம் 17. மகு
தூம் 18. ஹிஷாம் என்ற பெயரில் பிரபலமான
உமர் 19. ஜுபைர் 20. ஹுஸைன் அப்துல்
லாஹ் 21. முஹம்மது 22. ஷெய்கு மகுதூம்
23, முஹம்மது கல்ஜி அல் மிஸ்ரி அல்காஹிரி
24. கிழ்று 25. ஷிஹாபுத்தீன் 26. முஹம்மது
27. அஹ்மது 28. முஹம்மது 29. மகுதூம்
30. அப்துல் காதிர் 31. அஹ்மது மீரான்
32. மீரான் லெப்பை 33. அஹ்மது தம்பி
34. முஹம்மது இஸ்மாயீல் மரைக்காயர்
35. மகுதூம் முஹம்மது 36. முஹம்மது இஸ்
மாயீல் லெப்பை 37. அஹ்மது முஹ்யித்தீன்
38. ஷெய்க் அப்துல் காதிர் பாஜில் நூரி
காதிரி காஹிரி ஸூபி ஹலரத் ரலியல்
லாஹு அன்ஹு

தோற்றம் : ஹிஜ்ரி 1322

மறைவு : ஹிஜ்ரி 1402 ரமலான் பிறை 24

# இதயத்தைத்
# திறக்கும் வழி.



அல் ஆரிபுபில்லாஹ் அல்முஹிப்புர்
ரஸூல் அல்அல்லாமா அஷ்ஷெய்குல்
காமில் அஷ்ஷாஹ்

**ஷெய்கு அப்துல் காதிர்**

ஸூபி ஹழரத் அஸ்ஸித்தீகீ அல்காதிரி
அல்காஹிரீ ரலியல்லாஹு அன்ஹு
அவர்களின் 40-ம் நாள் பாத்திஹா
விழாவில் அன்னாரின் நினைவாக

**காயல்பட்டணம்**

**ஹிஸ்புல்லாஹ் ஸபையினரால்**

வெளியிடப்பட்டது.

# முன்னுரை.

ஏகன் அல்லாஹ்வுக்கே எல்லா புகழும். முத்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதும், அன்னார் குடும்பத்தினர், தோழர்கள் மீதும் ஸலாத்தும், ஸலாமும் உண்டாவதாக!

உங்கள் கரங்களில் தவழுகின்ற இச்சிறு வெளியீடு 1976 டிசம்பர் திங்களில் காயல்பட்டினம் ஸூபி மன்ஸில் திறப்பு விழாவின் போது—

தமிழகம், கேரளம், மற்றும் இலங்கையின் பல்வேறு பகுதிகளிலும் ஹிஸ்புல்லாஹ் ஸபை, ஸூபி மன்ஸில்களை தோற்றுவித்த ஷெய்குல் காமில், அல்ஆரிபு பில்லாஹ், அல்முஹிப்புர் ரஸூல், அஷ்ஷாஹ் ஷெய்கு அப்துல் காதிர் ஸூபி ஹழரத் அஸ்ஸித்தீகி, அல்காதிரி, அல்காஹிரி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆற்றிய பேருரைத் தொகுப்பு!

மெஞ்ஞானப் பெருவேந்தராம் ஷெய்கு நாயகம் அவர்கள் பல்வேறு மெஞ்ஞான நூற்களையும். அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாஅத் கொள்கை விளக்க நூற்களையும் தமிழ்கூறும் நல்லுலகிற்குத் தந்துள்ளார்கள்.

யாருக்கும் அஞ்சாது தீன் சேவையாற்றிய மகானவர்கள், ஹிஜ்ரி 1322ல் காயல்பட்டினத்தில் பேரோங்கிய கம்பெனியார் குடும்பத்தில் பிறந்தார்கள். (ஷெய்கு அப்துல் காதிர் என்ற மகானவர்களின் திருப்பெயரை அப்ஜது கணக்குப்படி கூட்டினால் 1322 வரும். ஷெய்குனா அவர்கள் பிறந்த ஆண்டும் இதுவே.)

பொதக்குடி காமில்வலீ அப்துல் கரீம் ஹழரத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் நேசத்திற்குரிய மாணவ

ரகத் திகழ்ந்த ஹழரத் அவர்கள் ஹிஜ்ரி 1349ல் பொதக்குடி அந்நூருல் முஹம்மதிய்யா மதரசாவில் "மௌலவி ஆலிம்" ஸனது பெற்றார்கள். ஸனது பெற்ற அதே ஆண்டுதான் ஷெய்கு நாயகமவர்களின் திருமணமும் நடைபெற்றது.

இதற்கிடையே 1346ல் தமிழகத்திற்கு விஜயம் செய்த இமாமுல் ஆரிபீன் அஷ்ஷாஹ் முஹம்மது அப்துல்காதிர் ஸூபி ஹழரத் ஹைதராபாத் அவர்களுடன் ஹைதராபாத்திற்குச் சென்று அங்கேயே சிறிதுநாள் தங்கி இருந்து ஞானதீட்சை (பைஅத்) யும், கிலாபத்தும் பெற்றுத் திரும்பினார்கள்.

ஹைதராபாத் ஸூபி ஹழரத் (ரலி) அவர்களிடம் பைஅத் பெற்றோரில் குறிப்பிடத்தக்க சிலர்:

சென்னை ஜமாலியா அரபுக் கல்லூரி முன்னாள் முதல்வர் மௌலானா மௌலவி மதார் சாகிபு ஹழரத் அவர்கள்.

வேலூர் பாக்கியாத்துஸ் ஸாலிஹாத் அரபுக் கல்லூரி முன்னாள் முதல்வர் மௌலானா மௌலவி அப்துல் ஜப்பார் ஹழரத் அவர்கள்

திண்டுக்கல், மௌலானா மௌலவி அமீர் பாட்சா ஹழரத் அவர்கள்.

இலங்கை மௌலானா மௌலவி அஹமது மீரான் சாகிபு (வெள்ளி ஆலிம்) ஹழரத் அவர்கள்.

கொடிக்கால்பாளையம் அ. த. அப்துல் மஜீது ஸூபி ஹழரத் அவர்கள்.

இந்திய யூனியன் முஸ்லிம் லீக் முன்னாள் தலைவர் காயிதே மில்லத் இஸ்மாயீல் சாகிபு அவர்கள்.

வழிகேடர்களுக்கும், தீனை விற்று வயிறு வளர்க்கும் கபட வேடதாரிகளுக்கும் சிம்மசொப்பனமாக விளங்கிய ஷெய்கு நாயகமவர்கள் எண்பது ஆண்டு காலம் பாரில் வாழ்ந்திருந்து தீன் சேவையாற்றினார்கள்.

தள்ளாத வயதிலும் தளராத மனத்துணிவோடு ஸூன்னத் வல்ஜமா அத்தின் நேரான பாதையை சீரான வகையில் போதித்த எங்கள் மாண்பிற்குரிய ஷெய்கு நாயகமவர்கள் ஹிஜ்ரி 1402 புனித ரமழான் பிறை 24 வெள்ளிக்கிழமை அதிகாலை 4-15 மணி சுமாருக்கு இறை அழைப்பை ஏற்று கொழும்பில் வைத்து மண்ணக வாழ்வைத் துறந்தார்கள். (இன்னா லில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிவூன்)

அவர்களது புனிதமிகு ஜனாஸா கொழும்பு குப்பியாவத்தை மையவாடியில் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளது.

மெஞ்ஞானப் பாட்டையில் ராஜநடை நடத்த ஷெய்கு நாயகமவர்களின் நினைவைப் போற்றுகின்ற வகையில் அவர்களது 40-ம் நாள் பாத்திஹா விழாவில் இப்பேருரையை கசியும் உள்ளத்தோடு வெளியிடுகிறோம்

எல்லாம் வல்ல இறைவா! எங்கள் ஷெய்கு நாயகத்தின் பேருரையைப் புரிந்து கொண்டு செயல்படுகின்ற திறனையும், அவர்கள் காட்டிய வழியில் நடந்திட நின் அருளையும், அன்னாரின் பிரிவினைத் தாங்குகின்ற மன உறுதியையும் எமக்குத்தா என இருகரமேந்தி இறைஞ்சுகின்றோம்.

இவண்

ஹிஸ்புல்லாஹ் ஸபை,

ஸூபி மன்ஸில்

காயல்பட்டணம்.

# இதயத்தை திறக்கும் வழி

(21—12—75 ல் நடந்த காயல்பட்டினம் ஸூஃபி மன்ஸில் திறப்பு விழாவின் போது ஷெய்குனா ஸூஃபி ஹழரத் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் ஆற்றிய பேருரை)

ஹம்து ஸலவாத்திற்குப் பின்னால்- நாம் இங்கு ஸூஃபி மன்ஸிலின் திறப்பு விழா நிகழ்ச்சிக்காக கூடியிருக்கின்றோம். 'திறப்பு' என்ற சொல் அரபியில் 'பத்ஹ்' என்றும் 'பலாஹ்' என்றும் சொல்லப்படும், அதாவது முக்தி, வெற்றி என்று இதைப் பொருள் கொள்ளலாம், இவை ஒன்றுக் கொன்று தொடர்பான கருத்துக்களாகும், அல்லாஹ் சுப்ஹானஹுவத் தஆலா நம் இதயங்களைத் திறப்பதற்கு ஒரு வழியாக- உதவியாகத்தான் நாமிங்கு கூடியுள்ளோம். இதயத்தில் போடப் பட்டிருக்கும் பூட்டை - அழுக்கை- திரையை-அகற்றுவதுதான் இதயத்தை திறப்பதாக ஆகும்.

அல்லாஹுத் தஆலா 'வஷ்ஷம்ஸி' சூருவில் 'சூரியனைக் கொண்டும், சந்திரனைக் கொண்டும், பூமியைக் கொண்டும் சத்தியம் செய்து இறுதியில்,

வ நப்ஸின் வமா ஸவ்வாஹா என்கிறான். மனிதனுடைய ஆன்மாவின் மீதும், அதை எப்படிப் பக்குவப்படுத்தி, எந்த நிலையில் வைத்துக் கொள்கி

றானே அதன் மீதும் சத்தியமாக என்று சொல்லி, மனிதனுக்கு அவனுடைய ஆன்மா முக்தியாகக் கூடிய வழியை உரித்தாக்கி கொடுத்ததோடு, அதை பரிசுத்தமாக்கும் முறையையும் அறிவித்துக் கொடுத்திருப்பதாக சொல்கின்றான். ஆகையால் எவன் அந்த ஆன்மாவை பரிசுத்தப் படுத்தினானே அவன் முக்தி(ஜெயம்)பெற்றவனாகின்றான். எவன் அதைப் பாழ் படுத்தினானே அவன் நஷ்டமடைத்தவனாகின்றான்! அப்படி அந்த இதயத்தைப் பாழ் படுத்தக் கூடியது என்ன? அல்லாஹ்வே கூறுகின்றான், ''ஈமான் கொண்டவர்களே! உங்களை உங்களுடைய, பொருளும், பிள்ளைகளும் அல்லாஹ்வின் ஞாபகத்தை விட்டு பராக்காக்க வேண்டாம் எவராவது இப்படிச் செய்வாரேயாகில் (அதாவது பிள்ளையைக் கொண்டும், பொருளைக் கொண்டும், அல்லாஹ்வின் எண்ணத்தை மறந்திருப்பாரேயாகில்) அவர்கள்தான் நஷ்டவாளிகள்

(மேலும்) அல்லாஹ் மனிதனுடைய பிணி என்பது என்ன என்றும் கூறுகின்றான் அது இம்மையின் மீது கொண்டுள்ள ஆசைதான்- அந்த இகலோக (துன்யா) ஆசைதான் இதயத்தில் திரையாக ஆகி யதார்த்தத்தில் இருக்கும் மெய்ப்பொருளை கண்டு கொள்ள முடியாமல் அழுக்காக அமைந்துள்ளது. அந்த அழுக்கானது திரையாக இருப்பதை பூட்டு என்றும் சொல்லலாம்: அல்லது கெட்டியான ஒரு 'துரு' என்றும் சொல்லலாம். இந்த துருவானது அவரவர்களின் நிலை(Stage)க்கு தகுந்தபடி படிந்துள்ளது, அல்லாஹ் கூறுகின்றான்

''அவர்களுடையமனங்களில் அவர்கள்
செய்த வேலையானது அழுக்காக —
துருவாக ஆகிவிட்டது'' —என்று

நாம் எந்த வேலையைச் செய்கிறோமோ அந்த வேலையின் குணபாடு கல்பிலே தெரியும்! நல்ல வேலையைச் செய்தோமானால் நல்ல குணபாடு தெரியும்; கெட்ட வேலையைச் செய்தோமானால் கெட்ட குணபாடு தெரியும் செய்கின்ற வேலையின் மூலம் ஒரு பிராக்டீஸ் (அனுபவம்) குலுக்-கிடைக்கும். குலுக்- என்றால் நற்குணம் என்று பொருள் (அதனால்தான்) ரசூல் (ஸல்) சொல்கின்றார்கள் அல்லாஹ்வின் நற்குணங்களை எடுத்துக் கொள்ளுங்கள் என்று. மேலும், 'என்னை நபியாக அனுப்பப்பட்டது. உங்களின் நற்குணங்களையெல்லாம் சம்பூர்ண மாக்குவதற்குதான்'' என்று ரசூல்(ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்.

மனிதர்களுடைய இதயங்களிலிருக்கும் பிணிகளை - (அழுக்குகளை - திரையை -துருவை) யெல்லாம்போக்கி அவர்களைப் பரிசுத்தமாக்குவதற்காக அல்லாஹ் தனது தீர்க்கதரிசிகளை அவ்வப்போது அனுப்பி வைத்தான். அவர்கள் வந்து மக்களுக்குப் போதனைகள் புரிந்து, மக்களுடைய இதயங்களை சுத்தமாக்கி: இதயங்களிலுள்ள அழுக்கை நீக்கி தெளிவாக்கி அங்கு போடப்பட்டிருந்த திரையைக் கிழித் தெறிவதற்கான பணிகளைச் செய்தனர்! இவ்வாறு எல்லா நபிமார்களையும் அனுப்பி இறுதியாக நமக்கு அல்லாஹுசுப்ஹானஹுவ்வத்தஆலா மாபெரும் ஒரு பாக்கியமாக அனைத்துஉலகிற்கும் காரணமான நாயகம்(ஸல்) அவர்களைத் தந்தான்.

நாயகம் (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்:- நான் அல்லாஹ்வின் நூரிலிருந்து வந்தேன்; சகல பொருட்களும் என்னுடைய நூரிலிருந்து வந்தன'

"அல்லாஹ் எல்லாப் பொருட்களையும் கொடுக்கின்றான்; நான்தான் அதைப் பங்கு வைக்கிறேன்"

இந்த இரண்டு ஹதீதுகளையும் நாம் எண்ணிப் பார்க்கிறபோது உலகத்திலுள்ள எந்த சிருஷ்டியாயினும் சரி ரசூலுல்லாஹ் (ஸல்) அவர்களின் கொடையைக் கொண்டல்லாது வெளி வரவில்லை என்பது அறியவரும்.

சகல சிருஷ்டிகளுக்கும் இரண்டு நிஃமத்துகள் அவசியம் தேவை. அதாவது அந்தகாரத்தில் கிடந்த சிருஷ்டிகளானது (இல்லாமைலிருந்து) உஜூதுக்கு வந்தன! அவைகளை மனிதர்களாக பொருட்களாக வெளியில் கொண்டு வந்தது ஒரு நிஃமத் (அப்படி இல்லாமையிலிருந்து உஜூதுக்குக் கொண்டு வந்த) பிறகு அவைகள் நிலை பெறுவான் வேண்டி அவைகளுக்கு உணவளிக்கப்பட வேண்டும். இவ்வாறு உணவளித்து (குறிப்பிட்ட காலம்) நிலைபெறச் செய்வது இரண்டாவது நிஃமத் இந்த இரண்டு நிஃமத்துக்களை விட்டும் உலகத்தில் எந்தவொரு பொருளும் விலக்காகாது. இதில் முதலாவதை "உஜூது" என்றும் இரண்டாமதை "கியாம்" என்றும் சொல்கிறோம். இந்த இரண்டு நிஃமத்துக்கும் காரணமானவர்கள் ரஸூலுல்லாஹ் (ஸல்) அவர்கள்தான்!

அல்லாஹுத்தஆலா முதலாவதாகப் படைத்தது ரசூலுல்லாஹ்வின் நூரைத்தான்! அந்த நூருடைய வழியாகத்தான் சகல சிருஷ்டிகளும் வெளி வந்தன! 'ஆண்டவனே! இவைகளை உஜூதுக்குக் கொண்டுவா! இல்லாமையில் இருப்பதை வெளியில் கொண்டுவா!" என்ற நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் சிபாரிசின்படி அல்லாஹுத்தஆலா

சகலவற்றையும் வெளியில் கொண்டு வந்தான்! பிறகு அவைகள் ''யா அல்லாஹ்! எங்களுக்கு ரிஸ்கை கொடு! எங்களைக் காப்பாற்று! எங்களை நிலைக்கவை என்று அதனதன்பாஷையில் கேட்டுக் கொண்டிருந்தன! அப்படிக் கேட்டபோது. அவை களுக்கு ரிஸ்கை அல்லாஹ் நேரடியாகக் கொடுத் திடவில்லை, ரிஸ்கை ரசூலுல்லாஹ்வின் கையில் கொடுத்தான். ரசூலுல்லாஹ்தான் அவைகளுக்கு (அல்லா கொடுத்த) ரிஸ்கை பங்கு வைத் தார்கள், இதைத்தான் ''அல்லாஹ் கொடுக்கிருன் நான்தான் (அவைகளை அவரவர்களுக்கு) பங்கு வைக்கிறேன்,'' என்று சொன்ஞர்கள் ரசூலுல் லாஹ்(ஸல்)அவர்கள், இப்படி சகல வஸ்துக்களும் வந்ததும் நிலைத்து நிற்பதும் நாயகம் (ஸல்)அவர் களின் பொருட்டிஞல்தான். ஆகவே எந்தப் பொரு ளும் ரசூலில்லாஹ் (ஸல்) அவர்களுக்குத் தெரியா மலிருக்க முடியாது. எனவே. எதிலிருந்து எதற் காக எப்பொழுது எங்கெங்கு (அவைகள்) போகின் றன ஆகிய அனைத்தும் அவர்கள் அறிவார்கள்!

இவ்வுலகத்திற்கு வந்த வஸ்துக்கள் அனைத் தும் நாயகம் (ஸல்) அவர்களால்தான் வந்தன அவர்களின் பொருட்டிஞல்தான் ரிஸ்குகள் கிடைக் கின்றன, இப்பொழுது நாம் பேசிக் கொண்டிருப் பது கூட அவர்களுக்குத் தெரியும் ரிஸ்க் என்பது நாம் உண்ணும் உணவு மட்டுமல்ல, சுவாசித்தல் மனித சக்தி அனைத்தும் ரிஸ்க்தான். ஒரு நிமிடமா யினும் சுவாசம் உள்ளே போய் வெளியே வர வில்லை என்ருல் மனிதன் இறந்து விடுவான்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவதரிக்கு முன் நடந்த சரித்திர நிகழ்ச்சிகளை, அல்லாஹ

அவர்களுக்கு 'நினைத்துப் பாருங்கள்' என்று கூறி ஞாபகம் மூட்டுகிருன் என்ருல் நாயகம் (ஸல்) அவர்கள் அனைத்தையும் அறிந்திருப்பதால தானே அவ்வாறு கூறுகிருன் இறைவன்!

இப்ருஹீம் (அலை) அவர்கள் ஒரு சமயம் கேட்டார்கள், ''ஆண்டவனே! செத்துப்போன மிருகங்களை நீ எப்படி ஹயாத்தாக்குவாய்? என்பதை எனக்குக் காண்பித்துத்தா'' என்று! அதற்கு அல்லாஹுதஆலா நான்கு பறவைகளைத் துண்டு துண்டாக வெட்டிப் பின் ஒன்ருகச் சேர்த்து கூப்பிடுங்கள் என்று சொன்னுன் 'இதைச் காட்டி இதை நீங்கள் நினைத்துப் பாருங்கள்' என்று நாயகம் (ஸல்) அவர்களிடம் அல்லாஹ் கூறினுன் இப்படி பல சரித்திரங்களைச் சொன்ன போதெல்லாம் ''இதை நினைத்துப் பாருங்கள்'' என்று சொன்னுன், ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள் என்று யாரிடம் சொல்வார்கள்? ஏற்கனவே தெரிந்திருக்கும் ஒருவரிடமல்லாது தெரியாதவரிடம் சொல்வார்களா? இப்படி நினைத்துப் பாருங்கள்; என்று சொன்னதிஞல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு அனைத்தும் தெரியும் என்பது புலனுகின்றது அல்லவா?

ஆதம் (அலை) அவர்களுக்கு மலாயிக்கத்துமார்களையெல்லாம் ஸுஜூது செய்ய வைத்ததும் தெரியும்! இப்லீஸ் ஸுஜூது செய்யாமல் ஓடியதும் தெரியும்! இனி நடக்கக் கூடியதும் தெரியும்!

ஆனுல் - வாஹ்ஹாபிகள் சொல்வார்கள்:

அல்லாஹ்வுக்கும் எல்லாம் தெரியும்: ரசூலுல்லாவுக்கும் தெரியும் என்று கூறுவதின் மூலம்

இருவரின் அறிவையும் சமமாக்கி விட்டாயே!'' என்று அவர்களின் புத்திக் குறைவினால் அப்படிக் கேட்பார்கள்! அப்படியல்ல அது! ரசூலுல்லாஹ் எல்லாம் அறிவார்கள் என்பது, அல்லாஹ் அறிவித்துக் கொடுத்ததினால் அறிவார்கள். ஆனால், அல்லாஹ் அறிவது யாரும்அறிவித்துக்கொடுத்து அல்ல! சுயமாகவே அல்லாஹ் அறிவான்! இரண்டாவது, நபிகள் நாயகம்(ஸல்)அவர்களின் அறிவு எவ்வளவு பரந்தும் விசாலமானதாயும் இருந்த போதிலும் அவர்கள் தாங்கள் ஒரு மஃலூக்காய் (படைக்கப் பட்டவர்களாய்) இருப்பதால் அவர்களின் அறிவு மஃலூக் (படைக்கப்பட்டதுதான்) எல்லைக்குள் உட்பட்டதுதான். அல்லாஹ்வின் அறிவு இயல்பாக உள்ள, எல்லைக்குள் அடங்காத அறிவாகும். அல்லாஹ்வின் அறிவு பூர்வீகமானது ரசூலுல்லாஹ்வின் அறிவு புதிதானது, அல்லாஹ்வின் அறிவுக்கு ரசூலுல்லாஹ்வின் அறிவு சமமாகாது.

அனைத்துப் பொருட்களும் ரசூலுல்லாஹ்வுக்குச் சொந்தம் அல்லாஹ் கூறுகின்றான், ''நபியானவர்கள் மூஃமின்களுக்கு அவர்களின் நப்ஸைவிடவும் மிக முக்கியமானவர்கள்.''

ஒவ்வொரு மனிதனுக்கும் அவரவர்களின் நஃப்ஸ்தான் பெரியது. அவர்களுடைய நப்ஸைவிட முக்கியமானது சமீபத்திலிருப்பதும், அவர்களுக்கு ஒன்றுமில்லை! உதாரணமாக, ஒரு தகப்பனிடத்தில் இஸ்ராயீல் வந்து, ஒரு ஆளின் உயிரை நான் வாங்கவேண்டும்; நீ வருகிறாயா? உன் மகனை எடுத்துக்கொண்டு போகட்டுமா? என்று

கேட்டால், ''என்னை எடுக்காதீர்கள்; என் மகனை வேண்டுமானால் எடுத்துக்கொண்டு போங்கள்'' என்றுதானே சொல்வான்! மனிதன் எந்த விஷயத்திலும் தன்னைதானே பெரிதாய் நினைப்பவன்! தான் தான் முக்கியம் அதன் பிறகுதான் பிள்ளை குட்டிகள் மற்றவைகள் எல்லாம் என்று நினைக்கக் கூடியவன்தானே மனிதன்? ஆனால், ரசூல் (ஸல்) அவர்கள் ஒவ்வொருவருக்கும் அவரவர் நஃப்ஸை விடவும் முக்கியமானவர்கள் என்றல்லவா அல்லாஹ் கூறுகிறான்! உங்கள் நஃப்ஸை நீங்கள் நேசிப்பதாக இருந்தால் அதைவிடவுல் ரசூலுல் லாஹ்வை நீங்கள் நேசித்துத்தான் ஆகவேண்டும்! ஏன்? நிழலை உவக்கின்றவன் உண்மையிலேயே மரத்தை நேசிக்கத்தானே வேண்டும்?

இவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வுடைய ஹபீபாக விளங்குகிறார்கள்; வேறெந்த நபிக்கும் 'ஹபீபுல் லாஹ்' என்ற பட்டம் கொடுக்கப்படவில்லை. இபுருஹீம் (அலை) கலீலுல்லாஹ் என்றழைக்கப் பட்டார்கள். மூஸா (அலை) கலீமுல்லாஹ் என் றழைக்கப்பட்டார்கள்,

சகலவற்றிற்கும் காரணமான தனது ஹபீபை அல்லாஹ் நமது இதயங்களைச் சுத்தப்படுத்து வதற்காக நமக்கு நேர்வழி காட்டுவதற்காக நம்மை முக்தி வழிக்குக் கொண்டு செல்வதற்காக அனுப்பி வைத்தான்.

இதையே அல்லாஹ்தான். 'மூஃமினனவர் களுக்கு அவர்கள் இனத்திலிருந்தே ஒரு நபியை அனுப்பி பெரிய உபகாரம் செய்ததாக'க் கூறு கின்றான்.

மனிதன் பிறந்ததிலிருந்து கப்ருக்குப் போகும் வரை - அவனது உச்சி முதல் உள்ளங்கால் வரை கப்ருக்குப் போன பிறகு கூட அல்லாஹ்வின் நிஃமத் ஒரு மனிதனுக்கு கிடைத்துக் கொண்டே இருக்கின்றன. அப்படி தனது நிஃமத்தை பரந்த அளவில் அல்லாஹ் மக்களுக்கு கொடுத்திருந்தும் 'நான் உனக்கு கண்ணைத் தந்து உபகாரம் செய்தேனே! காலைத்தந்து உபகாம் செய்தேனே! பிள்ளைகளைத் தந்து உபகாரம் செய்தேனே!' என்றெல்லாம் கூறவில்லை. ஆனால் தான் உபகாரம் செய்ததாக சொல்லிக் காட்டுவது, 'முஃமினானவர்களுக்கு அவர்கள் இனத்திலிருந்து ஒரு நபியை அனுப்பி பெரிய உபகாரம் செய்த' தாகச் செல்லுகிறான்!

அல்லாஹ் தனது ஹபீபை நமக்குத் தந்திருப்பது கிடைத்தற்கரிய ஒரு அபூர்வமான பாக்கியம் தான்! அப்படி அல்லாஹ் தனது ஹபீபைத் தந்ததற்கு நமது உச்சி முதல் உள்ளங்கால் வரையுள்ள ரோமகால்கள் எவ்வளவோ அதைவிட அதிகமாக நன்றி செலுத்த வேண்டும். அப்படி நன்றி செலுத்தினாலும் நாயகம் (ஸல்) அவர்களை நமக்கு அல்லாஹ் தந்த பாக்கியத்திற்கு ஈடாகாது.

நமக்கு நிஃமத்தாக வந்த நாயகம் (ஸல்) அவாகள் வேதத்தை மக்களிடையே ஓதிக் காட்டி ஹிக்மத்தைக் கற்றுக் கொடுத்தார்கள். அவர்களை நாம் கண்ணியப்படுத்த வேண்டும். உதாரணமாக ஒரு அரசாங்கத்திலிருந்து ஒரு தூதர் இன்னொரு நாட்டுக்குச் செல்வாரானால் அந்த தூதுவரைக் கண்ணியப்படுத்துவது அவர் சென்ற நாட்டு மக்களுடைய கடமை! அவரைக் கண்ணியப்படுத்துவது அவர் சார்ந்துள்ள நாட்டைக் கண்ணியப்படுத்து

வதாகும்! அந்தத் தூதர் வீட்டிலுள்ள ஒரு நாயை மரியாதைக் குறைவு செய்தாலுங்கூட அது அவர் சார்ந்துள்ள அரசாங்கத்தையே மரியாதைகுறைவு செய்ததாக ஆகும்.

ஒரு நாட்டின் தூதரை கண்ணியப்படுத்துவது அந்த நாட்டையே கண்ணியப்படுத்துவதாக ஆகுமென்ருல் இறைவனுல் அனுப்பப்பட்ட தூதரை நாம் எவ்வளவு கண்ணியப்படுத்த வேண்டுமென்பது சொல்லாமலே விளங்குகிறதல்லவா? இறைவன் கூறுகிருன் 'நாம் உங்களை அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவர்களாகவும், நன்மாராயம் சொல்லக்கூடியவர்களாகவும் அனுப்பினேம்.'' ஏன் அனுப்பினேம்? ''உம்மத்துகளே! நீங்கள் அல்லாஹுவை நம்புவதற்காகவும், அவனது ரசூலைக் கொண்டு ஈமான் கொள்வதற்காகவும், அந்த ரசூலை நீங்கள் கண்ணியப்படுத்துவதற்காகவும், மரியாதை செய்வதற்காகவும். அல்லாஹுத்தஆலாவை காலையிலும் மாலையிலும் தஸ்பீஹ் செய்வதற்காகவும் அனுப்பினேம்''! நாயகத்தை மூன்று விஷயங்களுக்காக அனுப்பியதாக அல்லாஹ் கூறுகிருன். இந்த மூன்று விஷயங்களில் ரசூலை சங்கை செய்வதை கண்ணியப்படுத்துவதை நடுவில் வைத்துச் சொல்லியுள்ளான். ரசூலைக் கண்ணியப்படுத்தாமல் இறைவனை ஒருவன் ஒப்புக்கொள்வானேயாகில் அவனுடைய ஈமான் ஏற்றுக்கொள்ளக் கூடியதல்ல! ரசூலைக் கண்ணியப்படுத்தாது தவ்ஹீதை மட்டுமே வைத்துக் கொண்டானேயானுல் அவனுடைய ஈமான் சரியாகாது. ரசூலை ஏற்றுக் கொள்ளாமல் — கண்ணியப்படுத்தாமல் எத்தனை இபாதத்துகள் செய்து கொண்டிருந்தாலும் பிர

யோஜனப்படாது ரசூலைக் கண்ணியப்படுத்தி தவ்ஹீது செய்தால் அந்தத் தவ்ஹீதை அல்லாஹ் ஏற்றுக் கொள்வான்!

இதற்காகத்தான் இறைவன் சொன்னான்: குல்குவல்லாஹு அஹது அல்லாஹுஸ்ஸமது...

(என்ற சூரதுல் இக்லாஸில்) அல்லாஹ்வின் தவ்ஹீதைத்தான் இதில் கூறுகிறான். ''அல்லாஹ் ஒருவன். (ஒருவன் என்றால் உள்ளிலும் வெளியிலும் எந்த வகையிலும் கூட்டு இல்லை) அவன் யாரளவிலும் தேவையற்றவன். சகல பொருட்களுமே அவனளவில் தேவையுள்ளவைகளாக இருக்கிறது. அவன் யாரையும் பெறவுமில்லை யாராலும் பெறப்படவுமில்லை. அவனுக்கு எந்த வஸ்துவும் நிகராகாது.'' இந்த சூரத் முழுவதிலும் தவ்ஹீதைத் தான் அல்லாஹ் சொல்கிறான். இந்த தவ்ஹீதைச் சொல்லுகிறபோது ஆரம்பத்தில் 'குல்' நாயகமே! அல்லாஹ்வின் தவ்ஹீதை நீங்கள் சொல்லுங்கள்! என்று கூறுகிறான்.

அப்படியானால் ரசூல் (ஸல்) சொன்ன தவ்ஹீதை எடுத்துக்கொள்ளாமல் அவர்களை ஒப்புக் கொள்ளாமல் 'லாயிலாஹ இல்லல்லாஹ்' என்று மட்டுமே கூறிக்கொண்டு ரசூலை நம்பவில்லையென்றால், நாயகமவர்களை ஏற்றுக்கொள்ளாமல் எந்த இபாதத்தும் செய்துக்கொண்டிருந்தால் (அப்படிப் பட்டவரின்) தவ்ஹீது ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. அல்லாஹ் கூறுகிறான் ''காபிரீன்கள் செய்யக்கூடிய அமல்களை புழுதிமண்ணாக நாம் ஆக்கி விடுவோம்!'' என்று

ஈமானில் பிரதானமான விஷயம் ரஸூலை ஏற்றுக்கொண்டு மரியாதை செய்யவேண்டும் என்

பதாகும். ரசூல் (ஸல்) அவர்கள் சொன்னவைகள் அத்தனையையும் ''நீங்கள் சொன்னவை அனைத்தும் மெய்தான்'' என ஏற்றுக்கொள்ள வேண்டும். அப்படி நம்புவதற்கு பெயர்தான் ஈமான் என்பது.

ஒருமனிதன் சொல்லும் வார்த்தையானது யதார்த்தத்திற்கு நேர்பட்டதாகவுமிருக்கலாம்! யதார்த்தத்திற்கு நேர்படாததாகவும் இருக்கலாம்! நாம் அந்த வார்த்தையை இது யதார்த்தத்திற்கு நேர்பட்டதுதான் என்று நம் மனதில் நம்பினுல் அதற்குப் பெயர்தான் ஈமான்! அப்படியானுல் அல்லாஹ்வை கொண்டு நம்புவது என்ருல் என்ன அர்த்தம்? 'அல்லாஹ் ஒருவன்; அவனுக்கு இணை துணையில்லை; அவனை யாரும் பெறவில்லை; அவன் யாரையும் பெறவுமில்லை; அவனுக்குச் சமமாக ஒருவருமில்லை' என ரசூல் (ஸல்) அவர்கள் சொன் ஞர்களே அந்த வார்த்தை சரிதான்; யதார்த்தத் திற்கு நேந்பட்டதுதான் என நம்புவதே ஈமான்! அல்லாஹ் ஒருவன் என ரசூல் (ஸல்) அவர்கள் கூறிய வார்த்தையை மெய் என்று நம்புவதுதான் அல்லாஹ்வைக் கொண்டு ஈமான் கொள்வது!

அப்படியானுல் இறுதியில் எங்கு சென்று முடி கிறது? ரசூலைக் கண்ணியப்படுத்துவதில்! அல்லா ஹுத்தஆலா அவர்களை தூதரென்று அனுப்பி, இவர் தூதர்தான் என்று காட்டுவதற்கு முஃஜி ஸாத்துகளை அல்லாஹ்தான் காட்டுகிருன். குர்ஆ னிலே 'முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்' - முஹம்மது அல்லாஹ்வின் தூதர் எனச் சொல்கிருன்! ''முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்'' என வந்தா இருக் கிறது குர்ஆனில்? முஹம்மது அல்லாஹ்வுடைய தூதரென்று நாயகமே! நீங்கள் சொல்லுங்கள்!

என்று அல்லாஹ் கூறாமல் முஹம்மது அல்லாஹ்வின் தூதரென்றுதானே கூறுகிறான்.

''அல்லாஹ் ஒருவன்; அவனுக்கு இணைதுணை இல்லை'' எனக் கூறிய (ஆயத்)தில் 'குல்' சொல்லுங்கள் என்று கூறியுள்ளான் அல்லாஹ்! அப்படியானால் 'லாயிலாஹ இல்லல்லாஹ்' என்பதை (நபியே!) நீங்கள் சொல்லுங்கள். முஹம்மதுர் ரசூலுல்லாஹி என்பதை நான் சொல்லுகிறேன். உலகத்தார்க்கெல்லாம் முஹம்மது அல்லாஹ்வின் ரசூல் என நான் சொல்லுகிறேன் என அல்லாஹ் சொல்கிறான்.

இப்படி அவனது தவ்ஹீதைப் பற்றி ரசூலைச் சொல்லச் சொல்றான்! ரசூலுல்லாவின் ரிஸாலத்தை--தூதுத்துவத்தை அல்லாஹ் கூறுகிறான். ஆகவே ரசூலைக் கண்ணியப்படுத்தாவிட்டால் அது மனதில் (நிஃபாக்) நயவஞ்சகத்தை உண்டாக்கும்.

உள்ளத்தளவில் ரசூல் என ஏற்றுக் கொள்ளாமல் உதட்டளவில் ரசூல் என்று சொல்வதினால் எந்தப் பலனுமில்லை! அல்லாஹுத்தஆலா நமது உள்ளங்களைப் பார்க்கிறான். ஆனால் முனாஃபிக்கீன்கள் ரசூலை நிராகரித்தவர்களாவார்கள். அவர்கள் உதட்டளவிலே 'ரஸூல்' என ஒப்புக்கொள்கிறவர்கள். இப்படி உள்ளத்தளவில் அல்லாது உதட்டளவில் ரசூல் என்று சொல்பவர்கள் முஃமின்கள் அல்ல என அல்லாஹ் கூறுகிறான். இதன் காரணமாகவே ரசூலைக் கண்ணியப்படுத்துவதை இறைவன் நடுவண் வைத்துக் கூறினான்.

ரஸூலைக் கண்ணியப்படுத்தாவிட்டால் தஸ்பீஹ் உங்களிடத்தில் செல்லாது. ரஸூலைக் கண்ணி

யப்படுத்தாவிட்டால் தல்ஹீது பிரயோஜனப் படாது. இதன் காரணமாகவே நாயகம் (ஸல்) அவர்கள் 'உங்களிலொரு மனிதன் அவனுடைய பிள்ளையைவிட, தகப்பனைவிட அவனுடைய நப்ஃஸைவிட நானவனிடத்தில் அதிக பிரியமாக்கப்பட்டவனாக ஆகிறவரை அவன் முஃமினாக ஆக மாட்டான்' எனச் சொன்னார்கள்.

ரசூலுடைய உகப்பு இருந்தால்தான் ஈமான் பூர்த்தியடையும்; இஸ்லாமும் சுத்தமாகும். இஸ்லாமென்பது நடைமுறை. அதை ஒழுங்காக சமவிருத்தி செய்து, ஈமான் இக்லாசுடன் நடந்தால் தான் கல்பு சுத்தமாகும். அதாவது கல்பிலிருக்கக் கூடிய திரை நீங்கும்; பூட்டு திறக்கும். இப்படித் திறப்பதற்கு திரையை விலக்குவதற்கு ரசூலைக் கண்ணியப்படுத்த வேண்டும்.

நமது கண்ணியத்திற்குரிய ஸதக்கதுல்லாஹ் அப்பா அவர்கள் மனிதனுடைய மனதுப்பிணி தீருவதற்கு 'மதீனா சர்க்காருக்குப் போக வேண்டும்' என்றார்கள். மேலும்,

''நாயகமவர்களே! எங்களுடைய இருதயப் பிணியானது உங்களுடைய மருந்தைக் கொண்டு அல்லாது சுகப்படாது. உங்களின் உவப்பு கொண்டல்லாது ஈமான் சரியாகாது. உங்களை ஒரு மனிதன் உவக்கிறானென்றால் அவன் கொடுத்துவைத்த பாக்கியசாலி!

ஒருவன் கியாமத் நாளையில் நரகக் குழியிலே தடுமாறி விழப்போனாலும் நரகின் அதிபதிகள் அவன் அல்லாஹ்வின் ரசூலை உகந்தவன் எனக்

கூறி அவனை நரகக் குழியின் அதாபை விட்டும் தவிர்த்து விடுவார்கள்! அல்லாஹ்வின் ரசூலை உகந்தவனுடைய முகத்தைப் பார்த்தே அதை அறிந்து கொள்வார்கள்!''

ரசூலுடைய உகப்பு இருக்கும்போது நரகம் ஒன்றும் செய்யாது! எங்கே போனாலும் எப்படிப் போனாலும் ரஸூலிடம்தான் போக வேண்டும்!

''அந்த வாசல் ஈடேற்றமாக சந்தோஷமாக சுபிட்சமாகப் போகக்கூடிய வாசல்! அந்த வாசல் வழி போகாமல் வேறு வாசல் வழியே போகாதீர்கள்! அந்த வாசல் ரஸூலுடைய வாசல்! அதுவே நேர்வழி!''

பாவம் என்பது அல்லாஹ்வின் ஏவல்களுக்கு மாற்றம் செய்து அவனது விலக்கல்களை உதாசீனப்படுத்தி நடப்பதாகும். இதுவே ஷரீஅத்திற்கு எதிரானது எனவும் சொல்லப்படும்.

முஃமினானவன் ரஸூல் (ஸல்) அவர்கள் கூறியபடிக்கே தவ்ஹீதைக் கொண்டு ஈமான் கொண்டாக வேண்டும். தெரியாது பாவம் செய்தால் அதைத் தீர்ப்பதற்கு ரசூலுல்லாஹ்விடம் போக வேண்டும்.

''அந்த ஜனங்கள் அநியாயம் செய்து விட்டு தவறு செய்து விட்டு உங்களிடத்திலே (ரசூலுல்லாஹ்விடத்தில்) வருவார்களேயானால் வந்து அல்லாஹுவிடத்தில் பிழை பொறுக்கத் தேடுவார்களேயானால் ரசூலும் அவர்களுக்காகப் பிழை பொறுக்கத் தேடுவார்களேயானால் அல்லாஹுத்தஆலா (அநியாயம் செய்தவர்களின்) பிழைகளை

பொறுத்து பொருந்திக் கொள்வான். என அல்லாஹ் கூறுகிறான்.

இங்கு மூன்று விஷயங்களை அல்லாஹ் கூறுகிறான். பாவத்தை செய்கிறவர்கள் என்ன செய்ய வேண்டும்? ரசூலுல்லாஹ்வின் தர்பாரில் நின்றுக் கொண்டு அல்லாஹ்விடம் பிழை பொறுக்கத்தேட வேண்டும்! பின்பு ரசூலுல்லாஹ் இவர்களுக்காக பிழை பொறுக்கத் தேடுவார்களேயானால் அப்பொழுதுதான அல்லாஹுத்தஆலா (அவர்களின்) பிழை பொறுத்து கிருபை செய்வான். இந்த மூன்றும் இருந்தால் அல்லாஹ பாவங்களை மன்னிப்பான். இங்கு அவர்களிடமிருக்கும் நஃப்ஸுக்கு அநியாயம் செய்தவர்கள் உங்களிடம் வருவார்களேயானால் மதீனாவுக்கு வருவார்களேயானால் என்று சொல்லவில்லை' ஏன்? மதீனாவுக்குப் போகிறவர்கள் பணக்காரர்களாகத்தானே இருப்பார்கள்? அவர்களும் வருடத்திற்கு ஒருமுறைதான் ஹஜ்ஜுக்குப் போவார்கள்! ஒவ்வொருவரும் மதீனாவுக்குப் போக முடியுமா? இயலாது அல்லவா?

ஆகவேதான் ''மதீனாவுக்கு வருவார்களேயானால்...'' எனச் சொல்லாது, 'உங்களிடத்திலே வருவார்களேயானல்' என்று கூறுகிறான் ரசூலுல்லாஹ்வின் காலத்திலேதான் அவர்கள் ஹயாத்தோடு இருக்கும்போதுதான் பாவம் செய்தவர்கள் ரசூலுல்லாஹ்விடம் போக வேண்டும் என்பதல்ல இந்த ஆயத்தினுடைய கருத்து!

இவ்வாயத்து ரசூல் (ஸல்) அவர்களுடைய காலத்தில் இறக்கப்பட்டது. ஸஹாபாக்கள் அப்போது இருந்தார்கள்! அவர்களுக்கு மட்டுமா

இவ்வாயத்து பொருந்தும்? இல்லை! எல்லோருக்கும்தான் அல்லாஹ் கூறுகிறான்! ரசூலுல்லாஹ் இப்போதும் ஹயாத்தோடுதான் இருக்கிறார்கள். இது நம் கண்களுக்குத் தெரியாது. ஜின்களெல்லாம் இருக்கின்றன. அவைகள் நம் கண்களுக்குத் தெரியவில்லை என்பதினாலேயே அந்த ஜின்களெல்லாம் இல்லாமல் போய் விட்டதா? அல்லது 'இல்லை' என்றுதான் சொல்லமுடியுமா? மலாயிக்கத்துமார்கள் நம் கண்களுக்குத் தெரியவில்லை என்பதினாலேயே அவர்கள் இல்லையெனச் சொல்ல முடியுமா? அதுபோல ரசூல் (ஸல்) நம் கண்களுக்கு மறைந்திருக்கிறார்களே தவிர வபாத்தாகவில்லை! வபாத்தாகி இருந்தால் நாம் எப்படி அவர்களிடம் போவோம்?

ரசூலுல்லாஹ் ஹயாத்தோடுதான் இருக்கிறார்கள் என்பது இதன் மூலம் விளங்குகிறது. ஆகவே நமது பிழைகள் பொறுக்கப்பட வேண்டுமானால் ரசூலுல்லாஹ்வின் தர்பாரிலே நின்றுக்கொண்டு அல்லாஹ்விடம் பிழை பொறுக்கத்தேட வேண்டும்!

நமது கண்கள் குருடாக இருக்கிற போது ரஸூலுல்லாஹ்வை நாம் எப்படிக் காண்பது? அதற்கு அல்லாஹ்தஆலா எளிதான வழியொன்றைக் காட்டுகிறான்.

ஜனங்களெல்லாம் சொல்வதுபோல ரசூலுல்லாஹ் மதீனாவில் மட்டுமல்ல! எங்கும் (நிறைந்து) இருக்கிறார்கள். அவர்களை உகந்தவனுடைய கல்பில் இருக்கிறார்கள்!

நாயகம்(ஸல்) அவர்களிடம் ஒருமுறை சஹாபாக்கள், ''நாயகமே! நாங்கள் ஒவ்வொருவரும்

ஸல்வாத்துச் சொல்கிறோமே! அது எப்படி தங்களுக்கு வந்து சேருகிறது?'' என்று கேட்டார்கள்.

நாயகமவர்கள் கூறினார்கள்; ''அல்லாஹ் ஒரு மலக்கை நியமித்துள்ளான்! அவர் என்னிடம் வந்து நீங்கள் சொல்லும் ஸலவாத்தைச் சொல்வார். அவர் ஒவ்வொரு நாளும் ஓயாமல் என்னிடம் வந்து சொல்லியவாறிருப்பார். இன்னின்னார் உங்களுக்கு ஸலவாத்து சொல்கிறார் என்று நித்தமும் என்னிடம் கூறிக்கொண்டே இருப்பாரவர். இதுவே அவரது வேலை! ஆனால், என் மீது ஆசை உள்ளவர் யாராவது ஸலவாத்துச் சொல்வாரேயானால் அந்த மலக்கு வந்து சொல்வதற்கு முன் நானே (என் மீது சலவாத்துச் சொன்னவரின்) அருகே போய் கேட்பேன்.

ரசூல் (ஸல்) அவர்கள் மீது ஆசையுள்ளவரிடம், 'நானே போய்க் கேட்பேன்' என ரசூல் (சல்) கூறுகிறார்களென்றால் அவர்களிடம் போக வழி என்னவென்றால் ரசூலுல்லாஹ் மீது உகப்பாக இருக்க வேண்டும். உகப்பாக சலவாத்துச் சொல்ல வேண்டும். அப்படியானால் அவர்கள் நம் பக்கத்திலேயே வந்து விடுவார்கள். ஆகவே சலவாத்து ஓதிவிட்டு அல்லாஹ்விடம் பிழை பொறுக்கத் தேடுங்கள். உங்கள் பாவங்கள் மன்னிக்கப்படும். அவ்வேளையில் நீங்கள் ரசூலுல்லாஹ்வின் தர்பாரில் நின்று கொண்டு கேட்கிறீர்கள்! எப்படி பார்த்தாலும் ரசூலுல்லாவின் வழியில் போகாதபடி—அவர்கள் சொன்னபடி நடக்காத முறையில் போனால் வெற்றி ஆகாது! ஆகவேதான் அல்லாஹுத்தஆலா ரசூலுல்லாஹ்வைக் கண்ணியப்படுத்துமாறு சொல்கிறான்!

''ஈமான் கொண்டவர்களே! உங்களின் குரலை ரசூலுல்லாஹ்வின் குரலுக்கு மேலாக உயர்த்தி சத்தம் போட்டு பேசாதீர்கள்! உங்களுக்குள் ஒருவருக்கொருவர் கூப்பிட்டுக் கொள்வது போல வெடுக்கென்று கூப்பிடாதீர்கள். அப்படி (குரலை உயர்த்தியும், வெடுக்கென்றும் கூப்பிட்டுக் கொண்டிருந்தால் உங்கள் அமல்களெல்லாம் அழிந்து விடும்!) உங்களுக்குத் தெரியாமல் நீங்கள் செய்த அமல்களெல்லாம் அழிந்து விடும்'' என்று அல்லாஹ் எச்சரிக்கிறான்.

ரசூல் (சல்) அவர்களை நாம் ஒருவருக்கொருவர் உறவின்முறை சொல்லி அழைப்பதைப் போல அண்ணன், மாமா என்றெல்லாம் அழைத்தல் கூடாது! மாறாக 'யா ரசூலல்லாஹ்! யா ஹபீபல்லாஹ்!' என்று கூப்பிட வேண்டும். இப்படித்தான் சஹாபாக்களெல்லாம் கூப்பிட்டார்கள்.

செய்யிதுனா அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் ஒரு முறையேனும் நாயகமவர்களை 'மருமகனே!' என்றழைக்கவில்லை. பாத்திமா நாயகி (ரலி) அவர்கள் ஒரு நாளேனும் ''என்னுடைய தகப்பனாரே!'' என்று அழைக்கவில்லை!

அப்பாஸ் (ரலி) அவர்கள் ஒரு நாளேனும் ''என்னுடைய மகனே!'' என அழைக்கவில்லை! வேறு எப்படிக் கூப்பிட்டார்கள்? யாரசூலல்லாஹ் யா ஹபீபல்லாஹ் என்று அழைத்தார்கள்! இப்படித்தான் நாமும் அழைக்க வேண்டும்! அப்படி இல்லையெனில் ஈமான் குட்டிச் சுவராகி விடும்.

நல்ல சிறிய அமல் செய்வதால் பெரிய பாவம் அழிந்தா போகும்? அழியாது! யார் ஒரு அணு அளவேனும் நன்மையைச் செய்தாரோ (அதற்

கான நற்கூலியை) பெற்றுக் கொள்வான்! அணு அளவேனும் தீமையைச் செய்தாலும் அதற்குரிய தண்டனையைப் பெற்றுக்கொள்வான்! ஆகவே ஒருவன் எவ்வளவு நன்மைகளைச் செய்திருந்தாலும் ரசூலைக் கொண்டு ஈமான் கொள்ளவில்லையானால்-ரசூலைக் கண்ணியப்படுத்தவில்லையானால் அவைகள் அனைத்தும் அழிந்துவிடும். அழிந்து விடுமென்றால் பொருளென்ன? காபிராகிப் போவார்கள்! காபிராகிப் போனால்தானே அமல்கள் எல்லாம் அழியும்? முஃமினாய் இருந்தால் அழியாது! அப்படியானால் ரசூல் (ஸல்) அவர்களை கொஞ்சம் வருத்தப்படுத்தினாலும், நீங்கள் காபிர் ஆகிப்போவீர்களல்லவா?

''என்னுடைய ஒரு ரோமத்திற்கேனும் யாராகிலும் ஒருவன் அவமரியாதை செய்வானேயாகில் அவனுக்கு சொர்க்கம் ஹராமாக்கப்படும்.'' என்று ரசூல் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். ரசூலுல்லாஹ்வின் முடியை ஒருவன் அவமரியாதை செய்தால் அலட்சியம் செய்தால் அது(கூட) ரசூலுக்கு வருத்தத்தைக் கொடுக்கும்.

கொடும்பாவி கட்டி ரோட்டிலே இழுத்துச் செல்வதை நாம் பார்க்கிறோம். அக்கொடும்பாவி மீது அடிக்கும்போது துணியினால் செய்த அதன் மீதுதான் அடி விழுகிறது. ஆனால் அக்கொடும்பாவி யாருக்காக கட்டப்பட்டதோ அவருக்கு அவமரியாதை செய்வதாக அங்கு எண்ணப்படுகிறது! யாரை அவமரியாதை செய்ய நாடி, அக்கொடும்பாவி இழுத்து செல்லப்படுகிறதோ அவருக்கு அவமரியாதை போய்ச் சேருகிறதல்லவா? இது போல நாயகத்தின் ஒரு ரோமத்தை இழிவு செய்தாலும், அது ரசூலையே அவமதித்ததாகும்.

ரசூலுடன் சம்மந்தப்பட்ட அனைத்து பொருட்களுக்கும் நாம் மரியாதை செய்ய வேண்டும்! இது தவிர ரசூலினுடையது என்று ஒரு ரோமத்தினைக் காட்டி ஜனங்கள் கூறினாலும் அதற்கு ஆதாரம் என்ன என்று தேடிக் கொண்டிருக்காமல் அதற்கும் மரியாதை செய்ய வேண்டும். சாட்சிகளும், ஆதாரங்களும் இங்கு தேவையில்லை! சாட்சிகள் ஒவ்வொரு விஷயத்திற்கும் ஒவ்வொரு விதமாக இருக்கின்றன! விபச்சார குற்றத்தை நிருபிக்க 4 சாட்சிகள் வேண்டும். அந்த 4 சாட்சிகளும் நாங்கள் கண்களால் கண்டோம் என சாட்சி கூற வேண்டும்! திருட்டுக் குற்றத்தை நிரூபிக்க 4 சாட்சிகள் தேவையில்லை! 2 சாட்சிகள் போதும். ஒருவன் அவனது பிள்ளைதான் என்று சொல்ல என்ன சாட்சி? இதற்கு சாட்சி தேவையில்லை! அதனால் ரசூலுடைய திருமுடி, ரசூலைச் சேர்ந்தது என்று ஜனங்கள் சொன்னால் கண்டிப்பாய் அதை நாம் (ஏற்றுக் கொண்டு) மரியாதை செய்தல் வேண்டும்.

''பெரிய மனிதர்கள் அனைவரும் அல்லாஹ்வின் ஞாபகச் சின்னங்கள்!'' ஆகவே பெரிய மனிதர்களுக்கு நாம் மரியாதை செய்ய வேண்டும். அல்லாஹ் சங்கைபடுத்திய எந்தவொரு வஸ்துவையும் மரியாதை செய்பவர்களை அல்லாஹ் புகழுகின்றான். அது தவிர்த்து பெரியவர்களை அவமரியாதை செய்தால் இபாதத்தை (வணக்கத்தை) கைவிட்டால் என்ன தண்டனை கிடைக்குமோ அதைவிட அதிகமான தண்டனை கிடைக்கும். பெரியவர்களை அவமரியாதை செய்தால் அது துன்பத்தில் கொண்டு போய் விட்டு விடும்!

ஈமான் என்பது ''லாயிலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்'' என்று மனதால் (நிய்யத் செய்து) வாயால் மொழிந்து அவர்களைக் கண்ணியப்படுத்த வேண்டும். ரசூல் (ஸல்) அவர்கள் சொன்னதைப்போல தவ்ஹீதைக் கடைபிடிக்க வேண்டும். அது தவிர வேறு தவ்ஹீதுக்குப் போய் விடக்கூடாது. கிறிஸ்தவர்கள் கூட தங்களை தவ்ஹீதுக் கொள்கையுடையவர்கள் என சொல்லிக் கொள்கிறார்கள். அந்த ஏகத்துவத்தை அல்லாஹ் ஏற்றுக் கொள்ளமாட்டான். நாம் ரசூல் (ஸல்) சொன்ன தவ்ஹீதுக்கு மாற்றம் செய்தால் அது பிரயோஜனப்படாது! அவர்கள் வேறெந்த உம்மத்துக்கும் கிடைக்காத நபியாகவும், நமக்கோர் அரும் பெரும் பொக்கிஷமாகவும் வந்துள்ளார்கள். அவர்களை பின்பற்றி நடப்பதன் மூலமாக அவர்களை நமக்கு அனுப்பி வைத்த அல்லாஹ்வுக்கு நன்றி செய்தவர்களாவோம்.

ரசூல் (ஸல்) அவர்களின் சொல்லை செயலுருவாக்கிக் காட்டியவர்கள் ஸஹாபாப் பெருமக்களாவர். மதீனாவில் ''அஹ்லுஸ்ஸுஃப்பா'' எனும் ஒரு கூட்டத்தினர் இருந்தனர். அவர்கள் எந்நேரமும் ரசூலுல்லாஹ்வின் உகப்பிலேயே இருப்பார்கள். எந்நேரமும் ரசூலுல்லாஹ்வின் எண்ணத்திலும், அல்லாஹுவின் தியானத்திலும் இருந்துக் கொண்டிருப்பார்கள். இப்படிப்பட்டவர்களின் ஒரு பெரும் கூட்டமே அன்று இருந்தது. அந்த அஹ்லுஸ்ஸுஃப்பாக்களின் ஞாபகார்த்தமாகத் தான் நாம் இதை ''ஸுஃபி மன்ஸில்'' என்று பெயர் வைத்திருக்கிறோம்,

அந்த அஸ்ஹாபுஸ்ஸுஃப்பாக்கள் எப்படி நடந்தார்களோ அப்படியே நாமும் (இறைதியானத்திலும், ரசூல் (ஸல்) அவர்களின் எண்ணத்திலும்) இருத்தல் வேண்டும். அவர்களின் நடைமுறைகளை பின்பற்றுவதற்காகத்தான் நாம் இந்த மாதிரி ஓர் அமைப்பை (ஸூபி மன்ஸில்) ஏற்படுத்தியுள்ளோம். இது ரசூலுல்லாஹ்வின் வழியைப் பின்பற்ற ஒரு காரணமாய் இருக்கிறது. ரசூல்(சல்) அவர்களின் வழிமுறைகளைப் பின்பற்றி போனால் நமது கல்பு பரிசுத்தமாகும்! கல்பிலுள்ள பிணி நீங்கும்.

அல்லாஹுத்தஆலா மனிதனைப் படைத்ததே அவனை அறிவதற்காகத்தான்!

''வமா கலக்துல் ஜின்ன வல்இன்ஸ இல்லா லியஃபுதூன்'' மனிதர்களையும், ஜின் வர்க்கத்தையும் என்னை வணங்குவதற்காகவன்றி (பிறிதொன்றுக்கும்) படைக்கவில்லை என்று அல்லாஹ் தனது திருமறையில் கூறுகிறான்! இங்கு பிரதானமான விஷயம் அல்லாஹுவை வணங்குவது! அல்லாஹுவை அறிவதற்கு தடையாக — திரையாக இருப்பது பாவமாகும்!

இந்த பாவமென்னும் திரை ஒரு வீட்டைப் பூட்டியதுபோல இருக்கிறது. இந்தப் பூட்டை— திரையை நீக்குவதற்கு நல்ல அமல்கள் செய்திட வேண்டும்! அப்படிச் செய்தால் நமது இதயப் பிணியும், திரையும் நீங்கி விடும்!

இப்படி நல்லமல்களைச் செய்வதற்காக ஏற்பட்ட இடம்தான் இந்த ''ஸூபி மன்ஸில்''

இந்த ஸூபி மன்ஸில் சிறந்த நல்லமல்கள் செய்வதற்குத்தான்!

நல்லமல்களை நாம் செய்தால் அல்லாஹுத் தஆலா நமது கல்பை— இதயத்தைத் திறப்பான். நமது கல்பைத் திறப்பதற்கு வஸீலாவாகத்தான் நாம் இந்த ஸூபி மன்ஸிலைத் திறந்து வைக்கிறோம்.

ஆகவே அல்லாஹு சுப்ஹானஹு வதஆலா நம்மனைவரின் இதயங்களைத் திறக்கச் செய்து நல்லருள் பாலிப்பானாக! ரசூல் (சல்) அவர்கள் மீது நமது உகப்பை—பிரியத்தை—நேசத்தை—அதிகப்படுத்துவானாக!

நாம் ரசூல் (சல்) அவர்களின் காலடிச் சுவட்டைப் பின்பற்றி எந்நேரமும் அல்லாஹ்வும், அவனுடைய ரசூலும் சொல்லியபடி நடந்து நாம் வெற்றியடைய அல்லாஹ் அருள்புரிவானாக!

ஆமீன்.

---

ஷெய்குனா ஹலரத் அவர்களது
வாழ்க்கை வரலாறு இன்ஷா
அல்லாஹ் விரைவில்
வெளிவரும்.

---

புஷ்ரா பிரஸ், காயல்பட்டணம்.

# ஷெய்குனா அவர்கள் எழுதிய நூற்கள்

## வெளிவந்தவை :

1. அத்துஹ்பத்துல் முர்ஸலா
2. அஸ்ஸுலூக் 3. ஞானதீபம் 4. அல்ஹக்
5. அஸ்ராறுல் கல்வத் (கல்வத்தின் இரகசியம்)
6. இள்ஹாறுல் ஹக் (சத்திய பிரகடனம்)
7. உலமாக்களின் உண்மை பத்வா
8. தப்லீக் ஜமாஅத்தில் வஹாபியத்தின் விஷக்கிருமிகள்
9. அறிவாளர்களே ஆராய்ந்து பாருங்கள்
10. காதியானி—தேவ்பந்தி சம்பாஷணை
11. தப்லீக் என்றால் என்ன?
12. சுவர்க்க நகைகளா? அல்ல! அது நரக விலங்குகள்

## வெளிவர இருப்பவை :

1. அல்ஹக் 2. அத்தகாயிக்
3. அகமியக் கண்ணாடி 4. கலிமத்துல் ஹக்
5. அல்முஹன்னதின் அண்ட புளுகு
6. மவ்தூதி சாஹிபும் அவரது ஜமாஅத்தே இஸ்லாமி இயக்கமும்

நூற்கள் கிடைக்குமிடம் :—

ஹிஸ்புல்லாஹ் ஸபை ஸூபி மன்ஸில்

குத்துக்கல் தெரு. காயல்பட்டணம்.